மலம் ஆதலும் சரி என்றால், (இங்ஙனம் அறிந்து) பின்னரும், நெஞ்சமே! நீ தரித்து நில்லாது, அச் சுவை அடிசில்களை விரும்பிச் சுழலுவது என்னை? சிவனை (இடைவிடாது) கருதல் இன்றி என, மநதைப் பார்த்து விவேகங் கூறல்.

45. (விஷயங்கள் ஆகிய) எல்லாவற்றுள்ளும் மகளிரையும், சுவையினைத் தருகின்ற முப் பழம் முதலிய புசிப்பினையும், (மநத்தால்) நினைப்பினும், (ஆண்) குறியும், நாவும், (இலேபநமும், நீர் ஊறலும் ஆகிய) அடையாளங்களைக் காட்டும் ஆனால், இவற்றைப் போலும் உனக்குப் பல (பிறவித்) துன்பங்களைத் தருகின்ற சத்துரு வேறொன் றில்லை யாகலின், (இப் பொருந்தல் அருந்தல்களைச் சத்துரு என்று அறிந்து, நெஞ்சமே! விடுத்தனை ஆனால், பின்னர் (யாவர்க்கும், மே லாகிய பரம சிவனது திரு வடி யாகிய நிழலை யாம் அடைதற்கு விக்கிநம் (வேறு ஒன்று) இன்று என, மநதைப் பார்த்து விவேகங் கூறல்.

46. இக் காயத்திற்கு ஒரு வியாதி வந்து பொருந்து மாயின், இதனால் அநுபவித்தற்குக் கருத்தில் வைத்த மனைவி ஆதிய பல போகங்களும், (இக் காயத்தில் தானே புசித்தற்கு) அந்நிய மாய்ப் போகும் ஆகலின், இவ் உடம்பினை விட்டு உயிர் நீங்கிய காலத்தும் சுற்றத்தாரா யுள்ளார் திரு வெண் நீற்றை (அவ் வுயிர்க்கு) நன்று என்று கருதித் தரித்து, (நீங்குந் தருணத்தில்), சிவனது திரு நாம மாகிய பஞ்சாக்ஷரத்தையும் உபதேசிப்பார்க ளானால், இனி நெஞ்சமே! உயிர் நீங்குங் காலத்துத் துணை யாகலின், (அத் திரு வெண்) நீறு முதலிய எண் வகையினையும், (அது நீங்கா முன்னரே) பேணிக் கொள்ளுதி, (மனைவி முதலிய எண் வகைப் பொருளும் இருக்கும் போதும் புசித்தற்கு அந்நிய மாகலின் நீ) அவைகளைப் பேணு தொழுதி என, மநதைப் பார்த்து விவேகங் கூறல்.



47. (மெய்ப் பொரு ளாகப்) பேணி விபூதியை (நிறையப்) புனைந்து, உருத்திராக்ஷங்களைச் (சிரசாதி ஸ்தாநங்களில்) தரித்துப், பஞ்சாக்ஷரத்தை மாநத மாய் உச்சரி. குரு லிங்க சங்கமம் ஆகிய மூன்று வடிவையும் தாழ்ந்து வணங்கு. (இங்ஙனம்) இவற்றை (நா டோறும் நீ மறவாது) செய்தியானால், நெஞ்சமே! பிறப்பினையும், இறப்பினையும், மாற்றிக்கொள்ள லாம். அஃதன்றி, கநக சபைக்கண் நடிக்கின்ற (சிவனது) திரு வடியும் (உயி ராகிய) உள் ளொளிக்கு உள் ளொளி யாய்த் தோன்றும். அத் திரு வடியைத் தொழுது, (அவ் விடத்து எக் காலமும் அழி வின்றி) வாழவுங் கூடும் (எமக்கு) என, மநதைப் பார்த்து விவேகங் கூறல்.

48. நெஞ்சமே! (அத் திரு வடியை அடைந்து) வாழ லாம். சிவனது புகழ் இன மாகிய மலர்களாலே, பா வாகிய மாலைகளை வனைந்து, திரு வடி மீதில் பொருந்து மாறு, பொன் போன்ற கொன்றை மாலை பொருந்திய புயங்களின் மீது தரித்து வணங்குவாய், அரியாலும் தேடப்பட்ட பொன் போன்ற திரு வடியே புகல் என்று, இங்ஙனஞ் செய்வ தன்றிப் பாழிலே கருங் காக்கை போல், (உலக நூல்களைக்) கற்றுக் கதறிப் பல நாள்களை (வீணிலே) கழித்து நாசம் ஆகாதே என, மநதைப் பார்த்து விவேகங் கூறல்.

49. பிறவி யாகிய பகை அதிசீக்கிர மாக ஒழிந்து போம். (சம்பந்தர் அப்பர் சுந்தர ராகிய மூவர், மாணிக்க வாசகர் முதலிய) பேர் அறிவினை யுடையோர் முன் நாளிலே தோத்திரம் பண்ணிய பாடலை நெஞ்சமே! நீ தோத்திரம் பண்ணுதி. காமுகர்க்கு இளமைத் தன்மையினை யுடைய பாவை போல்வார் கொஞ்சிக் கூறும் வசநம் போல, அத் தோத்திரங்கள் சிவனுக்குப் (பிரீதியா யிருக்கும்). இங்ஙனம் கூறிய மொழியை உபசார

மொழி என்று கருதி நீ விடாதே. உறுதி மொழி என்று (அறிந்து) கொள்வாய். (நெற்றிக் கண்) விழித்து மன்மதனை எரித்த கடவுளது திரு அருளைப் பெறும் விருப்பத்தினை உடைய (மெய் யடியாரது) விருப்பமும் இத் தோத்திரங்களே என, மனதைப் பார்த்து விவேகங் கூறல்.

**50.** நல்ல நெஞ்சமே! இந்த வார்த்தையைச் சந்தோட மாகக் கேட்பாயாக. நிர்மல னுகிய சிவனுக்கு அடிமை அல்லாதவர், பொன் மேருவைப் போலுந் தனங்களைச் சொரிந்தா ராயினும் அவர்களிடத்துப் புல்லினது நுனி மாத்திர மாயினும் அன்பு வைத்திடேல். சிவனது அடியாருக்கு அடியா னுகித் திரிந்து, அவரது பணிவிடைகளைச் செய்து, இவ் விடத்து இருப்பை யாகில் (எமக்கு) மிகவும் நன்மையை யுடையை நீ, (யான்) இங்ஙனங் கூறிய சொற்களை (உண்மை யாக) நம்பு, (இவைகளை நம்பாது) ஒழிதியேல் (எனக்கு நீ) பொல்லாய் என, மனதைப் பார்த்து விவேகங் கூறல்.

பக்தி (வைராக்ய) சதகச் சாத்திர ஐம்பது செய்யுளின் கிரமக் கருத்து விஷய அட்டவணை முற்றுப் பெற்றது.

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

சுபம் அஸ்து.

---

உ சிவமயம்.

# பக்தி (வைராக்ய) சதகப் பத வுரை.

அவதாரிகை. [பஞ்ச பூத காரிய மாகிய உடம்பினையும், ஞானேந்திரிய கருமேந்திரியங்களையும், விவேகம் நேதி களைந்து, அதன் பின்னர் அந்தக் கரணங்களையும், நேதிகளையத் தொடங்கும் போது, அவைகளுக்குட் பிரதான மான மனத்தை எதிரிட்டு நோக்கி நீக்குந் தோறும், அம் மனம் அந்த விவேகத் திற்கு மிகவும் ஒற்றுமைய தாகலின், நீங்காது முன்னைப் பழக்கம் போல், விவேகத்தைத் தன் வயப்படுத்தித் தனக்குப் பற்றுக்களா யுள்ளவற்றில் இழுத்துச் செல்ல, அதனை விவேகம் அறிந்து, தன்து வலியினுல் எதிரிட்டு நின்று, இஃது எவற்றைப் பற்றி எழா நின்றது என்று நோக்கி, அது பற்றிய பற்றுக்கள் யாவையும் இவை இவை என்று அறிந்து, அப் பற்றுக்களை எல்லாம் விடு வித்து, அதனைத் தன் வயம் ஆக்குதற் பொருட்டு, அம் மனத்தை முன் னிலை யாக்கி விவேகம் கூறிற்று என்று, விவேகத்தின் மேல் வைத்து இந் நூல் கூறுகின்றார்.]

1. வாழி நெஞ்சமே சென்றிடே னின்றிதோர் வார்த்தை யேற் றுறைசெய்வாய், கீழி யாமியற் றுயர்தவத் திவ்வுடல் கிடைத்ததன் றேமற்றீ, தூழி காலமிங் கிருக்குமோ நீயுமோர்ந் துளையேனி னுளபோழ்தே, சூழ மேழ்பவந் துடைத்தல்செய் யாயிதேன் றேழுதரன் றுணைத்தாளே.

இதன் பதப் பொருள்:—

வாழி — (பகைவனுற் காரியங் கொள்வோன் அவனைத் தனது வயம் ஆக்குதற் பொருட்டு அவனுக்கு இனிமை கூறுதல் போல நீ) வாழக் கடவாய், நெஞ்சமே — மனமே (என்று விவேகம் கூற,

அதற்கு, எண்ணில் காலம் உடலும் உயிரும் போலும், சேறும் நீரும் போலும், உம்மோடு பிரி வின்றி யிருந்த என்னை, இப் போது பிரித்து நின்று நீர் தோத்திரம் பண்ணியது என்னை என்று மநம் கேட்ப), சென்றிடேல் – (அதற்கு, நீ ஒரு கணப் போதாயினும் நில்லாது விஷயங்களிற் செல்லாநின்றனை அங்ஙனம்) செல்லாது, நின்று – நின்று; இது – இஃது, ஓர் – ஒரு, வார்த்தை – சொல், எற்கு – எனக்கு, உரை செய்வாய் – சொல்லுக (என்று விவேகம் கூற, அதற்கு, யான் சொல்ல வேண்டிய சொல் என்னை உளது? நீர் சொல்லுக் யான் கேட்கின்றேன் என்று மநம் கூற), கீழ் – (அதற்கு,) கீழ் (ப் போன அநந்த ஜநநங்களில்), யாம் – யாம், இயற்று – செய்திராநின்ற, உயர் – மே லான, தவத்து – தபோ (பலத்தினால்), அன்றே – அன்றே, இவ் – இந்த, உடல் – (கிடைத்தற்கு அரி தாகிய மானுட) தேகம், கிடைத்தது–கிட்டியது (என்று விவேகம் கூற, அதற்கு, ஈது உண்மை யாம் என்று மநம் சம்மதிப்ப, அதற்கு; அங்ஙனம் அரி தாய தேகத்தைப் பெற்றும், சீக்கிரத்திலே திரு வடியை அடைதற்கு ஏது பண்ணாமல் வீணாள் கழிப்பது என்னை? என்று விவேகம் கூற, அதற்கு, இந்த தேகம் பெற்ற நாம் இனித் திரு வடியை அடையாது விடுவோமோ? நீர் சீக்கிரம் பண்ணியது என்னை? சில நாள்களின் பின்னர் அதனை அடைகுதும் என்று மநம் கூற, அதற்கு), ஈது – இத் தேகம், ஊழி – கற்ப, காலம் – காலம், இங்கு – இவ்விடத்து, இருக்குமோ – இருப்பதோ? (இதற்கு அளவு கூறிய நூறாண்டு களுள் இடை இடையே கணந் தோறும் அநித்தியம் இருத்தலின், எந்தக் கணம் இருக்குமோ, எந்தக் கணம் போமோ, தெரியாது என்று விவேகம் கூற, அதற்கு, அங்ஙனம் அநித்திய மாம் எனின், இதனை யொழித்து இனி வரும் காயத்து அத் திரு வடியை அடைகுதும் என்று மநம் கூற, அதற்கு, இனி ஒரு காயத்தின்கண் அதனை அடைகுதும் என்னின், "பெறுதற் கரிய பிறவி" என்றும், சில நாள்களின் பின்னர் அடைகுதும் என்னின், "அறிதற் கரிய



அவதி" என்றும், விவேகம் கூற, அதற்கு, நீர் இங்ஙனம் கூறியது உண்மை என்று மநம் சம்மதிப்ப, அதற்கு, இந்தக் காயம் கிடைத்தற் கரிது என்பதையும், இதனது நிலையாமையினையும்), நீயும் – நீயும், ஓர்ந்தனை – (விசாரித்து) அறிந்தனை, எனின் – ஆயின், உள – (இக் காயம்) இருக்கும், போழ்தே – போதே, அரன் – சிவனது, துணை – உபய, தாள் – பாதங்களையும், தொழுது – வணங்கி, சூழும் – (எம்மை) வளைந்து கொள்ளாநின்ற, ஏழ் – எழு வகை, பவம் – பிறவிகளையும், துடைத்தல் – நீக்கிக் கொள்ளுதல், செய்யாய் – செய்கின்றா யில்லை, இது – இஃது, என் – என்னை (நின் கருத்து இருந்தது என்று விவேகம் கூறிற்று.) எ—று.

இலக்கணக் குறிப்பு :–

வாழி - வியங்கோள் வினை முற்று. நெஞ்சமே - விளி. சென்றிடேல் - எதிர் மறை முன் னிலை யேவல் வினை முற்று வினை யெச்ச மாய், அவ் வெச்சப் பொருள் தந்து நின்றது. கீழ்–(மேல் என்பது எதிர் காலம் குறிப்பது போல) இறந்த காலங் குறிக்கும் ஓர் இடைச் சொல். அது ஈண்டுக் கழிந்த செனமங்களைக் குறித்து நின்றது. அன்று, ஓ,மற்று - அசை நிலைகள். ஈது - நீண்ட சுட்டு. இருக்குமோ, ஓ - எதிர் மறை. நீயும் - உம் - இறந்தது தழீஇயது. ஓர்ந்தனை - முன் னிலைத் தெரி நிலை வினை முற்று. அது இங்கு வினை யெச்ச மாயிற்று. போழ்தே-பொழுது என்னும் காலப் பெயரின் விகாரம். ஏ - பிரி நிலையும் தோற்றமு மாம். செய்யாய் - முன் னிலை எதிர் மறை வினை முற்று. என் - என்ன - என்னும் வினா வினைக் குறிப்பு முற்றின் விகாரம். தாளே - ஏ - ஈற் றசை.

(சித–ரை) வாழி நெஞ்சமே என்பது,—பகைவனுற் காரியங் கொள்வோன் அவனைத் தனது வய மாக்குதற் பொருட்டு அவனுக்கு இனிமை கூறுதல் போல், நீ வாழக் கடவாய் நெஞ்சமே என்று விவேகங் கூற, அதற்கு எண்ணில் காலம் உடலு முயிரும் போலும்,

சேறு நீரும் போலும், உம்மோடு, பிரி வின்றி யிருந்த என்னை இப்போது பிரித்து நின்று நீர் தோத்திரம் பண்ணியது என்னை? என்று மநங் கேட்ப,

சென்றிடே னின் றிதோர் வார்த்தை யெற் குரை செய்வாய் எ-து,—அதற்கு நீ ஓர் கணப்போ தாயினும் நில்லாது விஷயங்களிற் செல்லாநின்றனை, அங்ஙனஞ் செல்லாது நின்று இஃ தோர் சொல் எனக்குச் சொல்லுக என்று விவேகங் கூற, அதற் கியான் சொல்ல வேண்டிய சொல் என்னை யுள? நீர் சொல்லுக யான் கேட்கின் றேன் என்று மநங் கூற,

கீ ழியா மியற் றுயர் தவத் திவ் வுடல் கிடைத்த தன்றோ எ-து,—அதற்குக் கீழ்ப் போன அநந்த சநநங்களில் யாஞ் செய்திரா நின்ற மே லான தபோ பலத்தினா லன்றோ இந்த அரி தாகிய மானுட தேகம் கிடைத்தது என்று விவேகங் கூற, அதற்கு ஈ துண்மையா மென்று மநஞ் சம்மதிப்ப, அதற்கு அங்ஙனம் அரி தாகக் கிடைத்த தேகத்தைப் பெற்றும் சீக்கிரத்திலே திரு வடியை அடைதற்கு ஏது பண்ணாமல் வீணாள் கழிப்பது என்னை? என்று விவேகங் கூற, அதற்கு இந்தத் தேகம் பெற்ற நாம் இனித் திரு வடியை அடையாது விடுகின்றோமோ, நீர் சீக்கிரம் பண்ணியது என்னை? சில நாள்களின் பின்னர் அதனை அடைகுது மென்று மநங் கூற,

மற் றீ தூழி கால மிங் கிருக்குமோ எ-து,—அதற்கு இத் தேகம் கற்ப காலம் இவ் விடத்து இருப்பதோ? இதற்கு அளவு கூறிய நூறாண்டுகளுள் இடை யிடையே கணந் தோறும் அநித்திய மிருத்தலின் எந்தக் கணம் இருக்குமோ எந்தக் கணம் போமோ தெரியா தென்று விவேகங் கூற, அதற்கு அங்ஙனம் அநித்திய மா மெனின், இதனை யொழித்து இனி வருங் காயத்து அந்தத் திரு வடியை அடைகுது மென்று மநங் கூற, அதற்கு இனி யோர் காயத்தின்கண் அதனை அடைகுது மென்னிற் பெறுதற் கரிய



பிறவி யென்றும், சில நாள்களின் பின்னர் அடைகுது மென்னின், அறிதற் கரிய அவதி யென்றும், விவேகங் கூற, அதற்கு நீர் இங்ஙனம் கூறியது உண்மை யென்று மநஞ் சம்மதிப்ப,

நீயு மோர்ந்துளை யெனின் எ-து,—அதற்கு இந்தக் காயங் கிடைத்தற்கு அரி தென்பதையும், இதனது நிலையாமையினையும், நீயும் விசாரித்து அறிந்தனை யாயின்,

உள போழ்தே சூழு மேழ் பவந் துடைத்தல் செய்யா யி தென் றொழு தான் றுணைத் தாளே எ-து,—இக் காய மிருக்கும் போதே சிவனது உபய பாதங்களையும் தொழுது எம்மை வளைந்துகொள்ளா நின்ற எழு வகைப் பிறவிகளையும் நீக்கிக்கொள்ளுதல் செய்யாய், இது என்னை நின் கருத் திருந்த தென்று விவேகங் கூறிற்று, எ-று. மற் றென்பது அசை நிலை.

“உயர்தவத் திவ்வுடல் கிடைத்த” தென்பதற்கு உதாரணம்: ஞாந வாசிட்டம். “எறியுங் கடலி னுகத்தொளையி லாமைக் கழுத்துப் புகுவதுபோற், பொறிவெம் பிறவி யநேகத்தாற் புருடன் விவேகி யெனப்பிறந்து, முறியும் பிறவிப் பயனிலதிம் மோக மமையுஞ் செய்தொழிலாற், செறிவ தென்னே யிவற்றாலே திநங்க ளெல்லாஞ் சென்றிடுமால்.” (6 இதோபதேசம் 9), “ஊழி கால மிங் கிருக்குமோ” வென்பதற்கு உதாரணம்: திரு வள்ளுவ நாயனார். “உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி, விழிப்பது போலும் பிறப்பு.”, (34-9). “பெறுதற் கரிய பிறவிக்கும் அறி தற்கரிய வவதிக்கும்” உதாரணம்: ஆநந்தத் திரட்டு. “பெறுதற் கரிய பிறப்பீ திதன்போக், கறிதற் கரிய வவதி-பிறிதொன்றை, நாடு தற்கு நேரமுண்டோ நன்னெஞ்சே முத்திநெறி, கூடுதற் கல்லாதுகு றித்து.” மற்றும் வருவனவற்றாற் காண்க. (1)

**[ இங்ஙனம் நீர் கூறியது உண்மையாகலின், இனித் திரு வடியை அடையக் கடவம் என்று மநம் சம்மதிப்ப, விவேகம் மேற் கூறுகின்றது. ]**

2. தாளை யேதர மறிகிலா தேமக்கெளி தருசிவப் பிரகாசற், காளி யாமெனத் திரிந்தவன் பணிபுரிந் தரியவீ டடைகில்லாய், கேளை யோமனை யாதிய வளற்றிலே கிடந் துழைத் தனைநெஞ்சே. நாளை யோலையுந் தூதரும் வரினிவர் துணைகோலோ நவில்வாயே.

(ப-ரை) தாளை — (சுரர் முத லாகத் தாவரம் ஈ ருகச் சொல்லப் படாநின்ற எழு வகைப் பிறவித் துன்பங்களையும், துடைத்தல் செய்யும் அரிய) திருவடிகளை, தரம்—(கொடுத்தற்குப் பக்குவன் என்றும், அபக்குவன் என்றும்,) தகுதி, அறிகிலாது — பாராது, எமக்கு — (அருமைப் படுத்தாது) நமக்கு, எளி — எளிதிலே, தரு — தந்த, சிவப்பிரகாசற்கு — சிவப்பிரகாசன் என்னும் நாமத்தை யுடைய ஆசாரியாருக்கு, ஆள் — (அவரது) அடிமை, யாம் — நாம், என — என்று (யாவரும் கூற), திரிந்து — (அவரது திருவுளத் திற்குப் பாங்காக) நடந்துகொண்டு, பணி— (ஏவல்) பணிவிடைகளை, புரிந்து — செய்து, அரிய — (அபக்குவர் அடைதற்கு) அரிய, வீடு — வீட்டினை, அடைகில்லாய் — அடைந்தா யில்லை, ஐயோ— ஐயோ, கேள் — (நீ) கேட்பா யாக, மனை—பெண்டீர், ஆதிய — முதலிய, அளற்றில் — (குடும்பச்) சேற்றின்கண், கிடந்து — வீழ்ந்து கிடந்து (நிலையா யிருந்து), உழைத்தனை — வருந்தினை, நெஞ்சே — நெச்சமே (நீ என்ன காரியம் செய்து கொண்டாய்), நாளை — (இனி) நாளைக்கு, தூதரும் — (இயம) தூதரும், ஓலையும் — (மரணச்) சீட்டும், வரின் — வரும் காலத்து, இவர் — இந்த (ப் பெண்டீர் ஆதிய) சீவர்கள், துணைகொலோ — துணை யாவரோ?, நவில் வாய்—கூறுவா யாக (என்று விவேகப் கூறிற்று.) எ—று. 2

(இ-பு) தாளையே - ஏ - பிரிநிலையும், தோற்றமு மாம். (என்னை? அபக்குவிகளுக்குக் கொடுக்கத் தக்கனவற்றைப் பிரித்தலானும், பக்குவிகளுக் குரிய அதனையே எனத் தெளிவுபடுத்தலானும் என்க).



எளி—'எளி தாக' என்னுங் குறிப்பு வினை யெச்சத்தின் விகாரம். ஆள் + யாம் = ஆளியாம்—இ—சாரியை. என—சொல் லெச்சம்; கூற என்னுஞ் சொற் கொண்டது. அடைகில்லாய்—முன் னிலை எதிர் மறை வினை முற்று. கு—சாரியை. இல்—எதிர் மறை யிடை நிலை. ஐயோ—இரக்கக் குறி. சேற்றிலே—ஏ—அசை நிலை. உழைத்தனை—முன் னிலைத் தெரி நிலை வினை முற்று. நெஞ்சே— விளி. ஓலையும், தூதரும்—உம்—இரண்டு எண்ணுப் பொருளன. கொ லோ—கொல்—அசை நிலை. ஓ—வினு. நவில்வாயே— ஏ—ஈற் றசை.

(சித—ரை) தாளையே தர மறிகிலாது எ-து,—சுரர் முத லாகத் தாவர மீருகச் சொல்லப்படாநின்ற எழு வகைப் பிறவித் துன்பங் களையும் துடைத்தல் செய்யும் அரிய திருவடிகளைக் கொடுத்தற்குப் பக்குவ னென்றும், அபக்குவ னென்றும், பாராது,

எமக் கெளி தரு சிவப்பிரகாசற்கு எ-து,—அருமைப் படுத்ாது எமக்கு எளிதிலே தந்த சிவப்பிரகாச ரென்னு நாமதேயத்தை யுடைய ஆசாரியருக்கு,

ஆ ளியா மெனத் திரிந் தவன் பணிபுரிந் தரியவீ டடைகில் லாய் எ-து,—அவர தடிமை யா மென் றியாவருங் கூற அவரது திருவுளத்திற்குப் பாங்காக நடந்துகொண்டு அவரது ஏவற் பணி விடைகளைச் செய்து யாவருக்கும் அரிய வீட்டினை அடைந்தா யில்லை,

கேளையோ எ-து, ஐயோ நீ கேட்பா யாக,

மனை யாதிய வளற்றிலே கிடந் துழைத்தனை நெஞ்சே எ-து,— பெண்டீர் முதலிய குடும்பச் சேற்றின்கண் வீழ்ந்து உழைத்துக் கொண்டனை நெஞ்சமே நீ யென்ன காரியஞ் செய்துகொண்டாய்,

நாளை யோலையுந் தூதரும் வரி னிவர் துணைகொலோ நவில் வாயே எ-து,– இனி நாளைக்கு இயமனது தூதரும், ஓலையும், வருங் காலத்து இந்தப் பெண்டி ராதிய சீவர்கள் துணையாவரோ வென்று விவேகங் கூறிற்று, எ-று.

மிகுந்த சேற்றில் விழுந்தோன் கிடந்து உழைத்தல் போல், மிகுந்த செல்வம் பெற்றோனுக்கும் அதின் மூழ்கி மயங்கி மறுமை குறிக்கக் கூடாமையில், கிடந் துழைத்தனை யென்று கூறப்பட்டது. "தாளையே தாமறிகிலாது" என்பசற்கு உதாரணம்: ஞான வாசிட்டம். "இயற்கைகுணஞ் சோதித்து முன்னே பின்னே யாவையுமாம் பிரமநீ யென்னல் வேண்டும், வியப்புறவா சையிலுழல் வார்க் கிவ்வா றேதின் மீளாத தீநரகில் வீழ்த்த தாகுந், தியக் குறுபோ கத்தாசை தீர்ந்து புந்தி தெளிந்தவனைப் போல்வார்க்கே திகழத் தோன்று, மயக்கமற வுணர்த்தவல்ல குருவைக் கிட்டா வருந்தியுந்தன் பிறப்பறுக்கு மகனு மாங்கே." (4-4-12), "பணிபுரிந் தரிய வீடடைகில்லாய்" என்பதற்கு உதாரணம்: வீராகமம். "அடுத்ததின் றன்மை யான்மா வாகுமென் றறிந்து நல்லோர், நடித்திடுஞ் சமய வாத நற்றவஞ் செபந்தி யானம், படிற்றுல கியற்கை யாவும் பரகதி விலக்கா மென்றே, விடுத்தருட் குரவன் பாத மேவிமெய்ப் பணிசெய் வாரே.", "மனை யாதிய வளற்றிலே கிடந்துழைத்தனை" என்பதற்கு உதாரணம்: ஞான வாசிட்டம். "தாரதந மிகுமென்னிற் றளையாகு மப்பாசந் தளைத்துக் கொண்டா, லாரதனை யறுத்தகலும் விரகுடையா ரறிவிலா ராசை விஞ்சிக், கூரிதையா மப்போகத் துழன்றுழக்குங் கொடுந்துயரைக் குறித்த போதே, தீரதையா மறிஞருக்கு விரத்தியுள தாய்ச்சித்தந் தெளியு மன்றே." (4-4-44) மற்றும் வருவனவற்றுற் காண்க. (2)

[நீர் கூறியது உண்மை, திரு வடியே துணை, மனைவி யாதிய சீவர்கள் துணையலர். ஆனால், இவர்களை விடுத்தாற் பரிதவிப் பர் என்பதும், இவரை வைத்துப் பாதுகாப்பதற்கு ஒரு துணை



யின்று என்பதும், குறித்து இவரோடும் கூடி நின்றேன் என்று மநம் கூற, அதற்கு, மேற் கூறுகின்றது.]

3. நவிலி னிம்மனை மக்களுக் கொருதுணை நாமல
தில்லையென்றே, கவலை யுற்றரன் றாண்மறந் தனையுனைக்
காலனார் கொடுபோயிற், குவல யத்தடைந் திவரைநா
டோறும்புரந் திடுவையோ குறிக்குங்காற், சவலை நெஞ்சமே
சிவனலா துயிர்க்குயிர் தானுமோர் துணையாமே.

(ப-ரை) நவிலின்–சொல்லுமிடத்து, இம் மனை–இப் பெண்டீர், மக்களுக்கு—புத்திரர் (முதலியோர்)க்கு, ஒரு—ஒப்பற்ற, துணை—ஆதரவு, நாம்—யாம், அலது—அன்றி, இலை — (வேறு) இன்று, என்று—என்று (கருதி), கவலை—விசாரம், உற்று—அடைந்து, அரன்—சிவனது, தாள்—திரு வடியை, மறந்தனை—மறந்தாய் (ஆகலின், திரு அடியே துணை என்றும், மனைவி ஆதிய சீவர்கள் துணை அலர் என்றும், நீ முன் கூறியவற்றிற்கு ஏது என்னை என்று விவேகம் கேட்ப, அதற்கு, இந்த மனைவி யாதிய சீவர்களை யாவர் காப்பர் என விடுப்பேன் என்று மநம் கூற), உனை—உன்னை, காலனார்—யமன், கொடு—கொண்டு, போயின்—போமிடத்து, குவலயத்து — (மீண்டு இப்) பூமிக்கண், அடைந்து — வந்து, இவரை — இச் சீவர்களை, நாள் தோறும் — எக் காலத்தும், புரந்திடுவையோ–காப்பையோ? (அஃ தன்றி, ஒரு கணப் போதாயி னும் வந்து, இவரை "நீர் நன்று இருக்கின்றீரோ" என்று கேட்கத் தான் கூடுமோ என்று விவேகம் கூற, அதற்கு, அவரை யான் இருக்கும் அள வாயினும் காக்குவல் என்று மநம் கூற, அதற்கு, நீ இருக்கும் போ தாயினும் நிருபர் முதலாயினோர் உன்னைக் கொண்டு போயினார் ஆயினும், அன்றி, அவரைக் கொண்டு போயினார் ஆயினும், அப் போது உன்னாற் காக்கப்பட்டார் யாவர்? என்று விவேகம் கூற, அதற்கு, நீர் கூறியது உண்மை என்று மநஞ் சம்மதிப்ப), குறிக்குங்கால் — (உண்மை யாகப்) பார்க்கும்போது,

சவலை — பேதமை யுடைய, நெஞ்சமே — மநமே, உயிர்க்கு — சீவர்களுக்கு, சிவன் — சிவனே, அலாது — (துணை) அன்றி, உயிர் — (சீவர்களுக்குச்) சீவர்கள், ஓர் — ஒப் பற்ற, துணை ஆமே — துணை ஆவரோ? (என்று விவேகம் கூறிற்று.) எ-று.

(இ-பு) அலது, இலை, உனை, கொடு — இவை இடைக் குறைகள். என்றே — ஏ — அசை நிலை. நாடோறும் — தோறும் — காலப் பன்மைப் பொருளில் வந்த ஓ ரிடைச் சொல். புரந்திடுவையோ — முன் னிலைத் தெரி நிலை வினை முற்று. இடு — பகுதிப் பொருள் விகுதி. ஓ — எதிர் மறைப் பொருளது. குறிக்குங் கால் — கால் — 'காலம்' என்பதன் விகாரம். நெஞ்சமே — விளி. உயிர் தானும் — தான் — அசை நிலை. உம் — இழிவு சிறப்பு. துணையாமே — ஏ — வினா, ஈண்டு எதிர் மறைப் பொருள்பட நின்றது.

(சிரு-ரை) நவிலி னிம் மனை மக்களுக் கொரு துணை நாமல திலை யென்றே கவலையுற் றான் றுண் மறந்தனை எ-து, — சொல்லு மிடத்துப் பெண்டீர் புத்திரர் முதலியோர்க்கு ஒப் பற்ற துணை நா மன்றி வேறு இன் றென்று சிவனது திரு வடியை மறந்தனை யாக லின், திரு வடியே துணை யென்றும் மனைவி யாதிய சீவர்கள் துணை யல ரென்றும், நீ முன் கூறியவற்றிற்கு ஏது வென்னை யென்று விவேகங் கேட்ப, அதற்கு இந்த மனைவி யாதிய சீவர்களை யாவர் காப்ப ரென விடுப்பே னென்று மநங் கூற,

உனைக் காலனூர் கொடு போயில் குவலயத் தடைந் திவரை நா டோறும் புரந்திடுவையோ எ-து, — உன்னை யமன் கொண்டு போமிடத்து மீண்டு இப் பூமிக்கண் வந்து இச் சீவர்களை எக் காலத்தும் காப்பையோ, அஃ தன்றி ஒரு கணப் போதாயினும் வந்து இவரை நீர் நன் றிருக்கிறீரோ வென்று கேட்கத் தான் கூடுமோ வென்று விவேகங் கூற, அதற்கு அவரை யான் இருக்கு மளவாயினுங் காக்குவ லென்று மநங் கூற, அதற்கு நீ யிருக்கும்



போதாயினும் நிருபர் முதலாயினோர் உன்னைக் கொண்டுபோயினு ராயினும், அல்லது, அவரைக் கொண்டு போயினு ராயினும், அப் போது உன்னாற் காக்கப்பட்டார் யாவ ரென்று விவேகங் கூற, அதற்கு நீர் கூறியது உண்மை யென்று மநஞ் சம்மதிப்ப.

குறிக்குங்காற் சவலை நெஞ்சமே சிவ னலா துயிர்க் குயிர் தானு மோர் துணையாமே எ-து, — உண்மை யாகப் பார்க்குமிடத்துப் பேதமை யுடைய நெஞ்சமே சீவர்களுக்குச் சிவனே துணை யன்றிச் சீவர்களுக்குச் சீவர்கள் துணையாவரோ வென்று விவேகங் கூறிற்று, எ-று.

"இயற்பெயர் முன்ன ராரைக் கிளவி, பலர்க்குரி யெழுத்தின் வினையொடு முடிமே." என்பதனாற் கால னென்னு மியற் பெயர் முன்னர் ஆ ரென்பது வந்தது. "நவிலிம்மனை மக்களுக் கொரு துணை" யென்பதற்கு உதாரணம்: ஆநந்தத் திரட்டு. "உடலை யொண்பொரு ளினையுல கியல்பினை யுயர்குல நெறிதன்னை, யடையு மைந்தர்தாய் தந்தைநன் மனையென வறைதரு மவர் தம்மை, விடவி கந்திறை கழலிணை மேவிய விமலர்தங் களை யெல்லா, முடைய நன்குறு மொழிமறை முனிவர்க ளுரைப்பராத் தர்களென்றே." "சிவனலா துயிர்க்குயி" ரென்பதற்கு உதாரணம்: திரு வருட் பயன். "அகர வுயிர்போ லறிவாகி யெங்கு, நிகரி லிறை நிற்கு நிறைந்து." (1) மற்றும் வருவனவற்றாற் காண்க. (3)

[ நீர் இங்ஙனம் கூறியது உண்மை. இனித் துணை ஆவது யாது? பகை ஆவது யாது? மனைவி ஆதிய சீவர்கள் வந்த ஆறு எங்ஙனம்? நீர் கூறுக என்று மநம் கேட்ப, அதற்கு, மேற் கூறுகின்றது. ]

4. துணைய தாயெமைத் தொடர்தரு தொடர்பரன் றேல்கழ றுணையல்லா, துணைவு செய்தடு மிகலதஞ் ஞாந

மேன் றுள்ளவா றுணராய்மற், றிணையி னெஞ்சமே பகையிவ ருறவிவ ரெனவினை வழியேவந், தணைவ சீவரை யுனிமுநி வாதிய வடுத்தேனைக் கெடுத்தாயே.

(பத உரை) துணையது ஆய் — (சிருட்டி தொடங்கி வீடு அடைவிக்கும் அளவும்) துணை யாகி, எமை—எம்மை, தொடர் தரு—விட்டு நீங்காதிருக்கின்ற, தொடர்பு—(உயிர்க்கு) உற வாகிய, அரன்—சிவனது, தொல்—தொன்மை யாய, கழல் — பாதங்களே, துணை — துணை (என்றும்), அல்லாது — (அஃது) அன்றி, உள் — உள்ளத்தை, நைவு—மெலிவு, செய்து—செய்து, அடும்—நாசம் பண்ணு நின்ற, இகலது—பகை யாவது, அஞ்ஞானம்—அஞ்ஞானமாம், என்று— என்றும், உள்ள—உள்ள, ஆறு—படியே, உணராய்-அறிந்தனை யில்லை, இணை இல் — (இழிவினால் உனக்கு வேறு) ஒப்பு இன்றிய, நெஞ்சமே — மனமே, வினை — (இரு) வினையின், வழி — வழியாய், வந்து—வந்து, அணைவ—பொருந்திய, சீவரை — சீவர்களை, இவர் — இவர், பகை—பகைவர், இவர்—இவர், உறவு—உறவர், என—எனவும், உனி—கருதி, முநிவு—(பகை என்று) வெகுளியும், ஆதிய (உறவு என்று) விழைவும், அடுத்து—அடைந்து, எனை — (உன்னோடு கூடிய) என்னையும், கெடுத்தாய்—கெடுத்தாய் (நீ என்று விவேகம் கூறிற்று.) எ-று.

(இ-பு) துணையதாய், இகலது-அது இரண்டும் பகுதிப் பொருள் விகுதிகள். எமை, உனி, எனை - இவை இடைக் குறைகள். உள்-உளம் என்பதன் கடைக் குறை. தொடர் தரு-தரு துணை வினை. உணராய் - எதிர் மறை வினை விற்று. மற்று - பிறிது என்னும் பொருளது. நெஞ்சமே - விளி. வினை வழியே - ஏ - தேற்றம் அசை எனினு மாம். எனை - என்பத னீற்றில் இறந்தது தழீஇய எச்ச வும்மை தொக்கது. கெடுத்தாயே - ஏ - ஈற் றசை.

(சித-ரை) துணையதா யெமைத் தொடர்தரு தொடர் பரன் றொல் கழ றுணை எ-து,—சிருட்டி தொடங்கி வீ டடைவிக்கு மளவும்



துணை யாகி எம்மை விட்டு நீங்காதிருக்கின்ற உயிர்க்கு உற வாகிய சிவனது தொன்மைப் பாதங்களே துணை யென்றும்,

அல்லா துணைவு செய்தடு மிகல தஞ்ஞான மென் றுள்ள வா றுணராய் எ-து,—அஃ தன்றி உள்ளத்தை மெலிவு செய்து நாசம் பண்ணுகின்ற பகை யாவது அஞ்ஞான மென்றும் உள்ளபடியே யறிந்தனை யில்லை,

இணையி னெஞ்சமே எ-து,—இழிவினு லுனக்கு வேறு ஒப்பு இன்றிய நெஞ்சமே,

பகையிவ ருறவிவ ரென வினை வழியே வந் தணைவ சீவரை யுனி எ-து,—இரு வினையின் வழிய ராய் வந்து பொருந்திய சீவர்களை இவர் பகைவ ரெனவும் இவர் உறவ ரெனவுங் கருதி,

முனி வாதிய வடுத் தேனைக் கெடுத்தாயே எ-து,—பகை யென்று வெகுளியும், உற வென்று விழைவும் அடைந்து, உன்னோடு கூடிய என்னையுங் கெடுத்தாய் நீ யென்று விவேகங் கூறிற்று, எ-று.

ஆணவத்தால் மறைப் புண்டு கிடந்த வுயிரைச் சிவன் தனது காருணியத்தினுல் எடுத்து மாயைக்கண்ணே தநு வாதிகளைக் கொடுத்து முன்னர் விடய ஞானத்தை விளக்கிப் பின்னர்ச் சுருதி குரு சுவாநுபவங்களினுல் சொரூப ஞானத்தை விளக்கி ஆநந்தாநுபவத்தைக் கொடுத்தலின், உயிர்க்கு உறவு சிவ னென்றும், உயிரினது இரண்டு ஞானத்தையும் அநாதியே மறைத்து வீ டடையு மளவும் துன்பத்தைச் செய்தலின், ஆணவம் உயிர்க்குப் பகை யென்றும், நல் வினை அநுபவிக்குமிடத்துப் பகைவரும் உற வாக லாலும், தீ வினை அநுபவிக்குமிடத்து மனைவி யாதி யுறவரே பகைவராய்த் தேக நாசஞ் செய்தலினுலும், இச் சீவர்கள் வினை வழியராய் வந்தவ ரன்றிப் பகைவரும் உறவரும் அல ரென்றும்

கூறப்பட்டது. மற்றென்பது அசை நிலை. "பகையில ருறவில" ரென்பதற்கு உதாரணம்: சிவ போக சாரம். "ஆர்பெரிய ரார்சிறிய ராருறவ ரார்பகைவர், சீர்பெரிய ராநந்த சிற்சொருபர் - பேர் பெரிய, ரெங்கெங்குந் தாமாயி ருந்துசட சித்தனைத்து, மங்கங்கி யற்றுவதா னுல்." (96) மற்றும் வருவனவற்றுற் காண்க. (4)

[ "கெடுத்தாயே" என்று என்னை நீர் வெறுப்பது என்னை? பயன் இன்றிய உறவைப் பற்றுதலால் என்னை உள? நீர் கூறிய வாறே விடுத்தேன் என்று உறவினை விடுத்துப் பொருளினைக் கருதிய மநத்தைப் பார்த்து விவேகம் மேற் கூறுகின்றது. ]

5. கெடுவ தாம்பொருள் செல்வமே பல்வகைக்
சிலேசமற் றதுதன்னை, விடுவ தேசுக மெனவுமோர்ந் திலை
முனம் விடுத்துளோர்க் குனைப்போலும், நெடிய யூகம
தில்லையோ சொல்லுதி நெஞ்சமே யினிப்பற்றற், றடைது
மேலர னருளையே பொருளென வருஞ்செல்வ மதுதானே.

(பத உரை) கெடுவது ஆம் – அழிந்து போவது ஆகிய, பொருள் - சொத்து, செல்வமே - (இன்பம் பயக்கும்) ஐசுவரியமோ, பல் வகை - பல வேறு வகைப்பட்ட, கிலேசம் - துன்பம் (என்று விவேகம் கூற, அதற்கு, முன்னர் மனைவி ஆதிய உறவுகளை நீர் விடுக்கச் சொன்னபடி விடுத்தேன். இப் போது இந்தப் பொருளை யாயினும் அருந்தலைக் குறித்து வைத்துக் கொண்டு தவத்தினைப் பண்ணுவல் என்றால், இதனையும், நாசம் என்றும், துன்பம் என்றும் கூறினீர். இனி இன்ப மாவது யாது? என்று மநம் கேட்ப), அது தன்னை - (அதற்கு,) அந்தப் பொருளை, விடுவதே - (கை) விடுவதே, சுகம் - சுகம், எனவும் - எனவும், (அதனைப் பிடித்தலே துன்பம் எனவும்), ஓர்ந்திலை - (உண்மை யாக) அறிந்தா யில்லை (நீ என்று விவேகம் கூற, அதற்கு, நன்று கூறினீர். இப் பொருளையும் விடுத்து, இரக்கச் சொல்லுகின்றீரோ என்று



மநம் கேட்ப,), முனம் - (அதற்கு,) முன்னர், விடுத்துளோர்க்கு - (பற்றுக்களா யுள்ளன யாவும் துன்பம் என்று அறிந்து) துறந் தோர்க்கு, உனை - உன்னை, போலும் - போலும், நெடிய - கூர்ந்த, யூகமது - புத்தி, இல்லையோ - இன்றோ, சொல்லுதி - (நீ) சொல் வாய் (என்று விவேகம் கூற, அதற்குச் சம்மதித்து, இங்ஙனம் சொல்லப்பட்ட பொருளுக்கு மே லாய பொருள் யாது? என்று மநம் கேட்ப,), நெஞ்சமே - நெஞ்சமே, இனி - இனி, பற்று - (இப் பொருளின் மேல் வைத்த) பற்றின், அற்று - நீங்கி, மேல் - மே லாய, அரன் - சிவனது, அருளையே - அருளையே, பொருள் - பொருள், என - என, அடைதும் - அடைவோம், அது தானே - (அதனை அடைந்தால்) அவ் வருள் தானே, அரும் - அரிய, செல்வம் - செல்வமும் (எமக்கு என்று விவேகம் கூறிற்று.) எ-று.

(இ-பு) செல்வமே - ஏ வினுவாய் எதிர் மறைப் பொருள்பட நின் றது. பல்-பல என்பதன் விகாரம். மற்று - அசை நிலை. அது தன்னை- தன் - சாரியை. விடுவதே - ஏ - தேற்றம். எனவும் - உம் - இறந்தது தழீஇய எச்சம். ஓர்ந்திலை - முன் னிலை எதிர் மறை வினை முற்று. முனம், உனை - இரண்டும் இடைக் குறைகள். விடுத்துளேன் - வினையா லணையும் பெயர். யூகமது - அது - பகுதிப் பொருள் விகுதி. இல்லையோ - ஓ - வினு. சொல்லுதி - முன் னிலை யேவல் முற்று. நெஞ்சமே - விளி. இனி - எதிர் காலங் காட்டு மிடைச் சொல். அடைதும் - உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினை முற்று. மே லரன் - பண்புத் தொகை. அருளையே - ஏ - பிரிநிலையும், தேற்றமு மாம். 'என' என்னும் வினை யெச்சம், 'அடைதும்' என்னும் முற்றுக் கொண்டது. அருஞ் செல்வம் இத னீற்றில் பெருமை யாதியவற்றைக் குறிக்கும் எதிரது தழீஇய எச்ச வும் மை தொக்கது. அது தானே - தான் - அசை நிலை. ஏ - ஈற் றசை.

(சிந—ரை) கெடுவ தாம் பொருள் செல்வமே பல் வகைக் கிலேசம் எ-து,—அழிந்து போவ தாகிய பொருள் செல்வமே பல

வேறு வகைப்பட்ட துன்ப மென்று விவேகங் கூற, அதற்கு முன்னர், மனைவி யாதிய உறவுகளை நீர் விடுக்கச் சொன்னபடி விடுத்தேன், இப் போது இந்தப் பொருளை யாயினும் அருந்துதலைக் குறித்து வைத்துக் கொண்டு தவத்தினைப் பண்ணுவ லென்றால் இதனையும் நாச மென்றுந், துன்ப மென்றுங் கூறினீர், இனி இன்ப மாவது யா தென்று மநங் கேட்ப,

அது தன்னை விடுவதே சுக மெனவு மோர்ந்திலை எ-து— அதற்கு அந்தப் பொருளைக் கைவிடுவதே சுக மெனவும், அதனைப் பிடித்தலே துன்ப மெனவும், உண்மை யாக அறிந்தா யில்லை நீ யென்று விவேகங் கூற, அதற்கு நன்று கூறினீர் இப் பொருளையும் விடுத்து இரக்கச் சொல்லுகிறீரோ வென்று மநங் கேட்ப,

முனம் விடுத்துளோர்க் குனைப் போலு நெடிய யூகம தில்லையோ சொல்லுதி எ-து,—அதற்கு முன்னர்ப் பற்றுக்களா புள்ளன யாவும் துன்ப மென்று அறிந்து துறந்தோர்க்கு உன்னைப் போலுங் கூர்ந்த புத்தி யின்றோ நீ சொல்லுவா யென்று விவேகங் கூற, அதற்குச் சம்மதித்து இங்ஙனஞ் சொல்லப்பட்ட பொருளுக்கு மே லாய பொருள் யா தென்று மநங் கேட்ப,

நெஞ்சமே யினிப் பற் றற் றடைது மே லா னருளையே பொரு ளென வருஞ் செல்வ மதுதானே எ-து,—நெஞ்சமே! இனி இப் பொருண் மேல் வைத்த பற்றி னீங்கி மே லாய சிவனது அருளையே பொரு ளென அடைவோம், அதனை அடைந்தால் அவ் வரு டானே அரிய செல்வமும், எமக் கென்று விவேகங் கூறிற்று, எ-று.

இப் பொருளால் இவ் வின்பம் வருதல் போல, அவ் வருளால் அவ் வின்பம் வருதலின், அருஞ் செல்வ மதுதானே யென்று கூறப்பட்டது. "செல்வமே பல்வகைக் கிலேச" மென்பதற்கு உதாரணம்: நீதி வெண்பா. "இன்னற ரும்பொருளை யீட்டுதலுந் துன்பமே, பின்னதனைப் பேணுதலுந் துன்பமே - யன்ன, தழித் தலுந் துன்பமே யந்தோ பிறர்பா, லிழத்தலுந் துன்பமே யாம்." (46) "விடுவதே சுக" மென்பதற்கு உதாரணம்: திரு வள்ளுவ நாயனார். "யாதனின் யாதனி னீங்கியா னோதல், லதனி னதனி னிலன்." (35-1) "அருஞ் செல்வமதுதானே" என்பதற்கு உதாரணம்: சம்பந்தர் திருக் கடைக் காப்பு. "செல்வ நெடு மாடஞ் சென்று சேணோங்கிச், செல்வ மதிதோயச் செல்வ முயர் கின்ற, செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய, செல்வன் கழலேத் துஞ் செல்வஞ் செல்வமே." (கோயில் 5) மற்றும் வருவனவற்றாற் காண்க. (5)

[ இங்ஙனம் கூறிய ஏதுவினால், பொருள் துன்பம் என்று விடுத்துக் கண்ட சுகத்தை விழைகின்ற மநத்தைப் பார்த்து மேற் கூறுகின்றது. ]

6. தானை சூழமண் ணுலகையாண் டழிபவர் தங்கள்
வாழ் வினிதென்றே, நீநி னைத்தியோ நெஞ்சமே யெஞ்சுரு
நிமலஞா னமதுற்றால், வானும் வையமும் வந்துதாள் வணங்கு
மெய் வாழ்வுகாண் டலும்வீண்முற், போன நாட்கிரங் கவும்
வரு மேனநலோர் புகன்றதோர்ந் திலைகாணே.

(பத உரை) தானை —(இரத கச துரக பதாதிக ளாகிய நால் வகைச்) சேனையும், சூழ —(தம்மைச்) சூழ்ந்துவர, மண் —(இப்) பூமி யாகிய, உலகை — உலகத்தை, ஆண்டு —(அரசு) ஆண்டு, அழிபவர் தங்கள் —(அவ் வாழ்வோடும்) அழிந்துபோகாநின்ற அரசர்க ளுடைய, வாழ்வு —(பொய்) வாழ்வினை, இனிது — இனியது (ஈ-து). என்று — என்ப தாக, நீ — நீ, நினைத்தியோ — கருதினை கொல்லோ, நெஞ்சமே — மநமே (என்று விவேகம் கேட்ப, அதற்கு, நீர் மேற் கூறிய வாறே உறவையும், பொருளையும் விடுத்தேன். இப் போது இவ் வரசரது செல்வத்தையும், இவரை

யாவரும் வணங்கும், இவரது பெருமையினையும், கண்டு அதிசயித்த மாத்திரமே யன்றி, வே றில்லை. அதற்கு நீர் இச் செல்வமும், பெருமையும், பொய் என்றும், இவற்றை நீ விரும்பாதே என்றும், கூறினார். ஆனால், இச் செல்வ பெருமைகளுக்கு மே லாய், மெய்ம்மை யாகிய செல்வமும், பெருமையும், எவை என்று மநம் கேட்ப,), எஞ்சுறு — (அணு வள வாயினும்) குறைவுபடாத, நிமல — (பரிபூர்ண மாய்) நின்மலமா யுள்ள, ஞாநமது — (சிவ) ஞாநச் செல்வத்தை, உற்றால் — (ஒருவன்) அடைந்தால், தாள் — (அவனது) பாதத்தை, வானும் — வானகத்தோரும், வையமும் — வையகத்தோரும், வந்து — வந்து, வணங்கும் — வணங்காநிற்பர்கள் (ஆதலின், மெய்ச் செல்வமும் பெருமையும் இவை என்று அறிதி), மெய் — (இஃது அன்றி இந்த) உண்மை, வாழ்வு — வாழ்வினை, காண்டலும் — கண்டவுடனே, முன் — முன்னர், வீண் — (பொய் வாழ்வில்) வீ ணாளாய், போன — கழிந்த, நாட்கு — காலங்களை, இரங்கவும் — (நினைத்து இந் நெடுங் காலம் இவ் வின்பத்தை விட்டு இருந்தோம் என்று) இரங்குதலும், வரும் — வரும், என — என்று, நலோர் — ஆப்தர், புகன்றது — (உரைத்த) வாக்கியங்களை, ஓர்ந்திலை — அறிந்திலை (போலும்), காண் — (நீ அவர் வாக்கியங்களைப் பார்த்து) அறிவா யாக (என்று விவேகம் கூறிற்று.) எ-று.

(இ-பு) அழிபவர் தங்கள் - தம் - சாரியை. அழிபவர் - வினையா லணையும் பெயர். என்றே - ஏ - அசை நிலை. நினைத்தியோ - ஓ - வினா. நெஞ்சமே - விளி. எஞ்சுறு - 'எஞ்சாத' என்பதன் ஈறு கெட்ட எதிர் மறைப் பெய ரெச்சம். ஞாநமது - அது - பகுதிப் பொருள் விகுதி. வானும் வையமும் - உம் - இரண்டும் எண்ணுப் பொருளன. காண்டலும் - உம் - (கண்ட) உடனே எனக் காலத் தாழ் வின்றி உட னிகழ்ச்சிப் பொருள் தந்து நின்றது. இரங்கவும் - உம் - இறந்தது தழீஇய வெச்சம். நலோர் - குறிப்பு வினையா லணையும் பெயர். புகன்றது - தெரி நிலை வினையா லணை



யும் பெயர். ஓர்ந்திலை - முன் னிலை எதிர் மறைத் தெரி நிலை வினை முற்று. காணே - ஏ - ஈற் றசை.

(சித-ரை) தானை சூழ மண் ணுலகை யாண் டழிபர் தங்கள் வாழ்வினி தென்றே நீ நினைத்தியோ நெஞ்சமே எ-து;—இரத கச துரக பதாதிக ளாகிய நால்வகைச் சேனையும் தம்மைச் சூழ்ந்து வர இப் பூ வுல கர சாண்டு அவ் வாழ்வோடும் அழிந்துபோகாநின்ற அரசர்களுடைய பொய் வாழ்வினை இனிது ஈ தென்று நீ கருதினை கொல்லோ நெஞ்சமே என்று விவேகங் கேட்ப, அதற்கு நீர் மேற் கூறிய வாறே உறவையும் பொருளையும் விடுத்தேன், இப் போது இவ் வரசரது செல்வத்தையும் இவரை யாவரும் வணங்கும் இவரது பெருமையினையுங் கண்டு அதிசயித்த மாத்திரமே யன்றி வே றில்லை, அதற்கு நீர் இச் செல்வமும் பெருமையும் பொய் யென்றும் இவற்றை நீ விரும்பாதே யென்றுங் கூறினீர், ஆனால் இச் செல்வப் பெருமைகளுக்கு மே லாய் மெய்மை யாகிய செல்வமும் பெருமையும் எவை யென்று மநங் கேட்ப,

எஞ்சுறு நிமல ஞாநம துற்றால் வானும் வையமும் வந்து தாள் வணங்கும் எ-து,— அணு வளாயினுங் குறைவுபடாத பரிபூரண மாய் நின்மல மா யுள்ள சிவ ஞாநச் செல்வத்தை ஒருவன் அடைந்தால் அவனது பாதத்தை வானகத்தோரும் வையகத்தோரும் வந்து வணங்காநிற்பர்கள், ஆதலின், மெய்ச் செல்வமும், பெருமையும், இவை யென்று அறிதி,

மெய் வாழ்வு காண்டலும் வீண் முற் போன நாட் கிரங்கவும் வரு மென நலோர் புகன்ற தோர்ந்திலை காணே எ-து,— இஃதன்றி இந்த மெய் வாழ்வு கண்டவுடனே முன்னர்ப் பொய் வாழ்வில் வீ ணாளாய்க் கழிந்த காலங்களை நினைத்து இந் நெடுங் காலம் இவ் வின்பத்தை விட்டு இருந்தோ மென்று இரங்குதலும் வரு மென்று ஆப்தர் உரைத்த வாக்கியங்களை அறிந் திலை போலும், நீ

அவாது வாக்கியங்களைப் பார்த்து அறிவா யாக வென்று விவேகங் கூறிற்று, எ-று.

“தானை சூழ மண்ணுலகை யாண்டீழிபவர்” என்பதற்கு, உதாரணம்: நா லடியார். “யானை யெருத்தம் பொலியக் குடைநிழற் கீழ்ச், சேனைத் தலைவராய்ச் சென்றொரு-மேனை, வினையுலப்ப வேறாகி வீழ்வர்தாங் கொண்ட, மனையாளை மாற்றார் கொள.” (1-3) “வானும் வையமும் வந்து தாள் வணங்கும்” என்பதற்கு உதாரணம்: ஞான வாசிட்டம். “மெத்தென்ற சரித்திரத்தி னவர்தம்மை யுலகெலாம் விரும்புந் தன்மை, கொத்தொன்று வனமூங்கிற் குழலிசை யான் மகிழ்விலங்கின் கூட்டம் போலு, மித்தன்மை யாவருக்கும் பொதுமையினா லியம்பியதா மிதனின் வேறாச், சத்தென்ற வழி யிரண்டேழ் பவந்தீர்ப் பவவர்க்கவற்றைச் சாற்றக் கேண்மோ.” (5-1-6) “போனநாட் கிரங்கவும் வரும்” என்பதற்கு உதாரணம்: பட்டணத்துப் பிள்ளையார் பாடல். “அண்ணறன் வீதி யரசிருப் பாகு மணிபடையோர், நண்ணொரு நாளொன்ப தாமவ ரேவலு நண்ணுமிவ்வூர், துண்ணென்ப சிக்கும டைப்பள்ளி யான்சு கமு மெல்லா, மெண்ணிலி காலம வமேவி டுத்தன மெண்ணரிதே.” பொது (27) மற்றும் வருவனவற்றாற் காண்க. (6)

[ இங்ஙனம் கூறிய ஏதுவாற் சுகப் பற்றை விடுத்து, இடப் பற்றைக் கருதிய மநத்தைப் பார்த்து மேற் கூறுகின்றது. ]

7. காணி யீதெம திடமிது வெனமனைக் கருதிமண்
ணாகின்றாய், நாணி லாய்மட நெஞ்சமே யுடலிது நமதிட
மலவென்றாற், பேண வும்படு மேயிதற் கிடமதாம் பிருதிவி
தனைநாகப், பூணி னான்றிருச் சரணமே யுயிர்க்கெலாம்
புகலிட மதுதேரே.

(பத உரை) ஈது - இது, எமது - எம் முடைய, காணி - நிலம், என - எனவும், இது - இது, இடம் - (எமது) வீடு, என -



எனவும், மனை - மனையை, கருதி - (எனது என்று) கருதி, மண் ஆகின்றாய் - மண் ணாய் மடிந்து போகின்றாய் (இங்ஙனம் எண்ணில் காலம் யா தொன்றை, யா தொன்றை நீ விழைந்து கருதினாய், அந்த அந்த மய மாய்நின்றே இறந்தனை, இங்ஙனம் இறந்தும், பிறந்தும், இத் துன்பங்களில் மொத்துண்டு இன்னும் பற்றாநின்றாய்), நாண் இலாய்- (நீ) வெட்கம் இல்லாய் (போலும்), மடம்-பேதமை (தானே நிறைந்த), நெஞ்சமே - மநமே (என்று விவேகம் கூற, அதற்கு, நீர் விடல் வேண்டும் என்றவற்றை எல்லாம் விடுத்தேன். இனி ஓர் இடம் ஆயினும் பிடித்துக் கொண்டிருந்து தவத்தைப் பண்ணுவேன் என்றால், நீர் இவ் விடமும் ஆகாது என்று கூறினீர். இவ் விடம் வேண்டும் எனப் பிடித்ததனால் குற்றம் என்னை என்று மநம் கேட்ப,), இது உடல் - (வாத பித்த சிலேஷ்மங்களினா லாகிய வியாதிகளுக்கு இடமா யுள்ள உடம்பு சட மாகலின், யாம் அறி வாகலின்) இவ் வுடம்பே, நமது - நமக்கு, இடம் - இடம், அல - அன்று, என்றால் - என்றால், இதற்கு - இதனுக்கு, இடமது ஆம் - இட மாய் உள்ள, பிருதிவிதனை - மண்ணினை, பேணவும் - (இடம் என்று) பிடிக்கவும், படுமே - தகுமோ (நீ சொல்லுதி என்று விவேகம் கூற, அதற்கு, நீர் கூறியது உண்மை யாம் அறி வுருவ மாய எமக்கு இடம் ஆவது யாது என்று மநம் கேட்ப,), நாகம் - நாகம்-சர்ப்ப, பூணினான் - ஆபரணனாகிய சிவனது, திரு சரணமே- திரு வடிகளே, உயிர்க்கு - உயிர்களுக்கு, எலாம் - எல்லாம், புகல் - அடையும், இடம் - இட மாகலின், அது - அச் சரணமே (நமது இடம் என்று), தேர் - (நீ) அறிதி (என்று விவேகம் கூறிற்று) எ-று.

(இ-பு) ஈது - நீண்ட சுட்டு. என, மனை, இலாய், அல, எலாம் - இவை இடைக் குறைகள். நெஞ்சமே - விளி. பேணவும் - உம் - எதிர் மறை. படுமே - ஏ - வினா வகையால் எதிர் மறைப் பொருள் தந்தது. இடமது - அது - பகுதிப் பொருள் விகுதி. பிருதிவிதனை - தன் - சாரியை, பூணினான் - குறிப்பு வினையா லணை

யும் பெயர். சரணமே - ஏ பிரிநிலையும், தேற்றமு மாம். தேரே - ஏ - ஈற் றசை.

(சித-ரை) காணி யீ தெம திட மிது வென மணைக் கருதி மண்ணுகின்றாய் நா ணிலாய் மட நெஞ்சமே எ-து,—இது எமது காணி யெனவும் இது எமது வீடு எனவும் மண்ணை என தென்று கருதி மண்ணாய் மடிந்துபோகின்றாய், இங்ஙனம் எண்ணில் காலம் யா தொன்றை யா தொன்றை நீ விழைந்து கருதினாய், அந்த அந்த மய மாய் நின்றே இறந்தனை, இங்ஙனம் இறந்தும் பிறந்தும் இத் துன்பங்களில் மொத்துண்டு இன்னும் பற்றாநின்றாய், நீ வெட்க மில்லாய் போலும், பேதமைதானே நிறைந்த நெஞ்சமே என்று விவேகங் கூற, அதற்கு நீர் விடல் வேண்டும் என்றவற்றை யெல்லாம் விடுத்தேன், இனி ஓரிட மாயினும் பிடித்துக்கொண் டிருந்து தவத்தைப் பண்ணுவே னென்றால் நீர் இவ் விடமும் ஆகா தென்று கூறினீர், இவ் விடம் வேண்டு மெனப் பிடித்ததனால் குற்றம் என்னை யென்று மநங் கேட்ப,

உட விது நம திட மல வென்றாற் பேணவும் படுமே யிதற் கிடம தாம் பிருதிவிதனை எ-து,—வாத பித்த சிலேஷ்மங்களினா லாகிய வியாதிகளுக்கு இடமா யுள்ள உடம்பு சட மாகலின் யாம் அறி வாகலின் இவ் வுடம்பே நமக்கு இடம் அன் றென்றால் இதனுக்கு இடமா யுள்ள மண்ணினை இட மென்று பிடிக்கவும் தகுமோ நீ சொல்லுதி யென்று விவேகங் கூற, அதற்கு நீர் கூறியது உண்மை யாம், அறி வுருவ மாய எமக்கு இட மாவது யா தென்று மநங் கேட்ப,

நாகப்பூணினான் றிருச் சரணமே யுயிர்க் கெலாம் புக லிட மது தேரே எ-து,—சர்ப்பாபரணனாகிய சிவனது திரு வடிகளே உயிர் களுக் கெல்லாம் அடையு மிடமாகலின் அதுவே நமது இட மென்று நீ அறிதி என்று விவேகங் கூறிற்று, எ-று.



இதற்கு உதாரணம்: சிவ தருமோத்தரம். "மண்ணி னுந் தனத்தினு மனைக்கு வாய்த்தநற், பெண்ணினு மகவினும் பெரிய பேரினுந், துண்ணெனா விழைவினைத் துறந்த தூயரே, விண்ணினு மின்புடன் விளங்கி மேவுவார்." (8-90) திரு வள்ளுவ நாயனார். "புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட், டுச்சிலி ருந்தவு யிர்க்கு." (34-10) மற்றும் வருவனவற்றாற் காண்க. (7)

[இங்ஙனம் கூறிய வாற்றல் இடப் பற்றை விடுத்துப் புகழை விரும்பிய மநத்தினை பார்த்து மேற் கூறுகின்றது.]

8. தேர்கி லாயிவண் புகழ்விழையுந் தனையினித்
தேகம்வே றடைந்தாயேற், சாரு மோவதி லிதிற்புக ழலதுநீ
தானுணர்ந் திடுவாயோ, பேரி யாதியா மார்கோன்முற் பவத்
திகழ் பெறினுமித் துணைநேஞ்சே, யோரி னேரில்வீ டுறுதலே
புகழிக முறல்பிறப் பேனவுன்னே.

(பத-உரை) தேர்கிலாய் — (புகழினது உண்மையை நீ நன்றாக விசாரித்து) அறிந்தா யில்லை, இவண் — இவ்விடத்து, புகழ் — புகழை, விழைந்தனை — விரும்பாநின்றனை, இனி — (இக் காயத்தை விட்ட) பின்பு, வேறு தேகம் — வேறு காயத்தை, அடைந்தாயேல் — அடைந்தா யாகில், இதில் — இதன்கண் (வந்த), புகழ் — புக ழானது அதில் — அதன்கண், சாருமோ — (வந்து) பொருந்துமோ, அலது — (அஃது அன்றி, முற் பவத்து இன்ன புகழை யுடையான் இவன் என்று பிறரால் அறிந்து சொல்லத் தான் படுமோ அஃது) அன்றி, நீ தானும் — நீ தான் (முற் பவத்திலே நற் புகழை யுடையேன் யான் என்று), உணர்ந்திடுவாயோ — அறிதியோ (என்று விவேகம் கேட்ப, அதற்கு, இஃதாயினும் எனக்குத் தெரியாதோ என்று மநம் கூற), முன் — (அதற்கு, இனி மேல் வரும் பிறப்பு விவகாரம் நினக்கு தெரியு மாயின், முன் பிறப்பின் விவகாரமும் நினக்குத் தெரியு மாகலின்) முந்திய, பவத்து — பிறப்பின்கண், பேர் —

(எமக்குப்) பேர், யாது — என்ன, யாம் — நாம், ஆர் — யாவர் (எமது விவகாரம் என்னை சொல்லுதி என்று விவேகம் கேட்ப, அதற்கு, மாறு உத்தரம் கூறுதல் இன்றி மநம் சும்மா இருப்ப), இகழ் — (அதற்கு, உனக்கு வெறுப் பாகிய) இகழ்ச்சி, பெறினும் — அடையினும், இத் துணை — (அது) இந்தப் புகழ்ச்சி போலவே யாகும், நெஞ்சமே — மநமே (என்று விவேகம் கூற, அதற்கு, நீர் இங்ஙனம் கூறிய வாற்றால் யாவரும் கூறுகின்ற புகழ் இகழ்வுகள் இல்லை என்ப தாயிற்று. ஆகலின், இவைகள் இல்லையோ என்று மநம் கேட்ப'), ஓரின் — (உண்மை யாக) விசாரிக்குமிடத்து, நேர் — ஒப்பு, இல் — அற்ற, வீடு — வீட்டினை, உறுதலே — அடைதலே, புகழ் — புகழ் — புகழ்ச்சி, என — எனவும், பிறப்பு — பிறப்பினை, உறல் — அடைதலே, இகழ் — இகழ்ச்சி (எனவும்), உன்னு — (நீ) அறிதி (என்று விவேகம் கூறிற்று.) எ-று.

(இ-பு) தேர்கிலாய் - முன் னிலை எதிர் மறைத் தெரி நிலை வினை முற்று. தேர் - பகுதி. கு - சாரியை, இல் - எதிர் மறை யிடை நிலை. ஆய் - முன்னிலை வினை முற்று விகுதி. சாருமோ, உணர்ந்திடுவாயோ - ஓ - இரண்டும் வினு வகையால் எதிர் மறைப் பொருள் தந்து நின்றன. இடு - பகுதிப் பொருள் விகுதி. பேர்+ யாது - பேரியாது - இ - சாரியை. யார் கொல் - கொல் - அசை நிலை. அலது - என - இவை இடைக் குறைகள். நீ நான் - தான் அசை நிலை. பெறினும் - உம் - இறந்தது தழீஇய எச்சம். நெஞ்சே - விளி. உறுதலே - ஏ - பிரி நிலையும் தேற்றமு மாம். உன்னே - ஏ ஈற் றசை.

(சிற-ரை) தேர்கிலா யிவண் புகழ் விழைந்தனை இனித் தேகம் வே றடைந்தாயேற் சாருமோ அதி லிதிற் புகழ லது நீதா னுணர்ந்திடுவாயோ எ-து,— புகழினது உண்மையை நீ நன்றாக விசாரித்து அறிந்தா யில்லை, இவ் விடத்துப் புகழை விரும்பா நின்றனை, இக் காயத்தை விட்டு இனி வே றோர் காயத்தை யடைந்தாயேல் இதன்கண் வந்த புகழ் அதன்கண் வந்து பொருந்



துமோ; அஃ தன்றி முற் பவத்து இன்ன புகழை யுடையான் இவ னென்று பிறரா லறிந்து சொல்லத் தான் படுமோ; அஃ தன்றி நீ தான் முற் பவத்திலே நற் புகழை யுடையோன் யா னென்று அறிதியோ வென்று விவேகங் கேட்ப, அதற்கு இஃதாயினும் எனக்குத் தெரியாதோ வென்று மநங் கூற,

பே ரியாதி யா மார் கொல் முற் பவத்து எ-து;— அதற்கு இனி மேல் வரும் பிறப்பு விவகாரம் நினக்குத் தெரியு மாயின், முற் பிறப்பின் விவகாரமும் நினக்குத் தெரியு மாகலின், முற் பிறப்பின் கண் எமக்குப் பேர் யாது? யாம் யாவர்? எமது விவகாரம் என்னை? நீ சொல்லுதி யென்று விவேகங் கேட்ப, அதற்கு மா றுத்தரங் கூறுத லின்றி மநஞ் சும்மா விருப்ப,

இகழ் பெறினு மித் துணை நெஞ்சே எ-து,— இதற்கு உனக்கு வெறுப் பாகிய இகழ்ச்சி வரு மாயினும் அது இந்தப் புகழ்ச்சி போலவே யாகும் நெஞ்சமே யென்று விவேகங் கூற, அதற்கு நீர் இங்ஙனம் கூறியவாற்றால் யாவருங் கூறுகின்ற புக ழிகழ்வுகள் இல்லை யென்ப தாயிற்று, ஆகலின், இவைகள் இல்லையோ வென்று மநங் கேட்ப,

ஓரி னேரில் வீ டுறுதலே புக ழிக ழுறல் பிறப் பென வுன்னே எ-து,— உண்மை யாக விசாரிக்கு மிடத்து ஒப் பற்ற வீட்டினை அடைதலே புக ழெனவும், பிறப்பினை அடைதலே இக ழெனவும் நீ அறிதி யென்று விவேகங் கூறிற்று, எ-று.

வீட்டினை யடைந்தோரும் நித்தியம், ஒன்றனையும் விரும் பாது அவ் வீட்டினையே விரும்பி அடைந்த அவரது புகழும் நித்தியம், பிறப்பினை யடைந்தோரும் அநித்தியம், இவரது புகழும் அநித்தியம், ஆகலின், அது புக ழென்றும், இது இக ழென்றுங் கூறப்பட்டன. இதற்கு உதாரணம் : ஒழிவி லொடுக்கம். "நாயேறி வீழ்ந்தென் னடாத்துகிலென் ஞானிக்குப், பேயாஞ் சகம்பழித்

தென் பேணுகிலென் - ஞேயார், பெருமை சிறுமையிலை பின்னு முன் னுமில்லை, வரைவற்று வேண்டியசெய் வார்." (1-56), உறவு முதல் புக ழீ றாய ஐந்திற்கும் உதாரணம்: பிரபு லிங்க லீலை. "ஓடும் பொன்னு முறவும் பகையுமோர், கேடுஞ் செல்வமுங் கீர்த் தியு நிந்தையும், வீடுங் கானமும் வேறற நோக்குதல், கூடுந் தன்மை கொளுமந நன்மநம்." (18-19), மற்றும் வருவனவற்றுற் காண்க. (8)

[ தானையே தரமறிகிலாது" என்னும் பாட்டு முதல் இவ் வேழ பாட்டாலும், மநத்திற்குப் புறப் பற்றுக்களா யுள்ள உறவு பொருள் சுகம் இடம் புகழ் என்கிற இவ் வைந்தையும் விடுவித்து, இந்த உறவு முதலாகிய ஐந்தும் சிவனது திருவடியே என்று அறிவித்து, இனி உட் பற்றை நீக்கி, அத் திரு வடியை அடைதற்கு ஏது வாய தவத்தைச் செய்யும்படி மநத்தைச் சம்மதிக்கப் பண்ண, அது சம்மதித்துத் தவம் செய்யத் தொடங் கும் போது, அத் தவத்தால் தன்னைப் பிறர் பெரியன் என்று கூற, அப் பெருமை கருதிய மநத்தைப் பார்த்து விவேகம் மேற் கூறு கின்றது. ]

9. உன்னு கின்றனை யுனைமனோர் பெரியனென்
றுணருமா செயவுன்பால், மன்னு மீசனே பந்தம்வீ டளிப்ப
வன் மற்றைய ரறிந்தென்னும், அன்ன வன்றிருப் பொன்னடி
கரியதா வருந்தவஞ் செய்நெஞ்சே, பின்னை முன்னவ
னுலகறிந் திறைஞ்சுமா பெருமைசெய் குவனோரே.

(பத உரை) உனை - உன்னை, மனோர் - இவ் வுலகத்தி லுள் ளார், பெரியன் - (தவத்தாற்) பெரியன், என்று - என்று, உணரும் - அறியும், ஆ(று) - வண்ணம், செய - செய்ய, உன்னு கின்றனை - (நீ) கருதுகின்றனை, உன்பால் - உன்னிடத்து, மன் னும் - (விட்டு நீங்காது) நிலை பெற்றிருக்கின்ற, ஈசனே - பரம



சிவனே, பந்தம் - (நீ செய்த அவத்தினையும், தவத்தினையும் அறிந்து, அவத்திற்குப் பயனாய) பந்தமும், வீடு - (தவத்திற்குப் பயனாய) வீடும், அளிப்பவன் - தருபவன், மற்றையர் - (அச் சிவனை அன்றி) ஒழிந்த சீவர்கள், அறிந்து - (உன்னைப் பெரியன் என்று) அறியும் படி, (அவர் சாக்ஷி யாக நீ செய்யும் தவத்தால்), என் - (உனக்கு) என்ன (பயன்), ஆம் - உண்டாம் (என்று விவேகம் கூற, அதற்கு, அச் சிவனது திருவுள்ளத்துக்குப் பாங்காக நடக்கின்ற நன்னெறி யாது என்று மநம் கேட்ப), அன்னவன் - (சீவ சாக்ஷி குறியாமல்) சிவனது, பொன் - பொன் போன்ற, திருவடி, கரியது ஆ(க) - சாக்ஷி யாக, அரும் - அரிய, தவம் - தவத்தினை, நெஞ்சே - மநமே, செய் - (நீ) செய்தி (என்று விவேகம் கூற, அதற்கு, அத் திரு வடி சாக்ஷி யாகச் செய்யுந் தவத்தால் வரும் பெருமை யாது என்று மநம் கேட்ப,), பின்னை - (அதற்கு, இங்ஙனம் நீ தவம் செய்த) பின்னர், முன்னவன் - (யாவர்க்கும்) முதல்வனாகிய சிவன், உலகு - (இவ்) வுலகத்தி லுள்ளார் (யாவரும்) அறிந்து - (நின்னைப் பெரியன் என்று) அறிந்து, இறைஞ்சும் ஆ(று) - வணங்கும்படி, பெருமை - பெரு மையை, செய்குவன் - செய்வான், ஓர் - (இதனை நீ) அறிதி (என்று விவேகம் கூறிற்று.) எ-று.

(இ-பு) உனை, மனோர், செய - இவை இடைக் குறைகள். உணருமா, கரியதா, இறைஞ்சுமா, என் - இவை கடைக் குறைகள். மனோர் - குறிப்பு வினையா லணையும் பெயர். உன்பால் - பால் - ஏழ னுருபு. ஈசனே - ஏ - பிரிநிலையும், தோற்றமு மாம். அறிந்து - 'செய'வென் வாய்பாட்டுத் தெரிநிலை வினை யெச்சம் காரணப் பொருளில், 'அறிந்து' எனத் திரிந்து நின்றது. செய - என்னும் வினை யெச்சம், "உன்னுகின்றனை" என்னும் முன் னிலைத் தெரி நிலை வினை முற்றுக் கொண்டது. பந்தம் வீடு - உம்மைத் தொகை. நெஞ்சே - விளி. பின்னை - 'பின்' என்னுங் காலங் குறிக்கு மிடைச் சொல்லின் விகாரம். முன்னவன் - குறிப்பு வினையா லணையும் பெயர். உலகு - இட வாகு பெயர். ஓரே - ஏ - ஈற் றசை.

(சித-ரை) உன்னுகின்றனை யுனை மனோர் பெரிய னென் றுணரு மா செய எ-து,—உன்னை இவ் வுலகத்தி லுள்ளார் தவத் தாற் பெரிய னென்று அறியு மாறு செய்ய நீ கருதுகின்றனை,

உன்பான் மன்னு மீசனே பந்தம் வீ டளிப்பவன் மற்றைய ரறிந் தென் னும் எ-து,—உன்னிடத்து விட்டு நீங்காது நிலைபெற் றிருக்கின்ற பரம சிவனே நீ செய்த அவத்தினையும் தவத்தினையும் அறிந்து அவத்திற்குப் பய னாய பந்தமும் தவத்திற்குப் பய னாய வீடும் தருபவன், அச் சிவனை யன்றி ஒழிந்த சீவர்கள் உன்னைப் பெரிய னென்று அறியும்படி அவர் சாக்ஷி யாக நீ செய்யுந் தவத் தால் உனக்கு என்ன பயன் உண்டா மென்று விவேகங் கூற, அதற்கு அச் சிவனது திரு வுளத்துக்குப் பாங் காக நடக்கின்ற நன் னெறி யா தென்று மநங் கேட்ப,

அன்னவன் றிருப் பொன் னடி கரியதா வருந் தவஞ் செய் நெஞ்சே எ-து,—சீவ சாக்ஷி குறியாமல் சிவனது திரு வடி சாக்ஷி யாக அரிய தவத்தினை நெஞ்சமே நீ செய்தி யென்று விவேகங் கூற, அதற்கு அத் திருவடி சாக்ஷி யாகச் செய்யுந் தவத்தால் வரும் பெருமை யா தென்று மநங் கேட்ப,

பின்னை முன்னவ னுல கறிந் திறைஞ்சு மா பெருமை செய் குவ னேரே எ-து,—அதற்கு இங்ஙனம் நீ தவஞ் செய்த பின்னர் யாவர்க்கும் முதல்வ னாகிய சிவன் இவ் வுலகத்தி லுள்ளார் யாவரும் நின்னைப் பெரிய னென்று அறிந்து வணங்கும்படி பெருமையைச் செய்வான், இதனை நீ அறிதி யன்று விவேகங் கூறிற்று, எ-று.

இதற்கு உதாரணம்: சிவ போக சாரம். "நாம்பெரிய ரென்னு மதை நாடா தடக்குமவர், தாம்பெரிய ரென்றுமறை சாற்றியிடு - நாம்பெரிய, ரென்பார் சிறிய ரிவரலா திவ்வுலகிற், றுன்பார் சுமப் பார்கள் சொல்." (84) மற்றும் வருவனவற்றுற் காண்க. (9)



[ இங்ஙனம் திரு வடி சாக்ஷி யாகத் தவம் செய்கின்ற மநம் சுவர்க்க விம்பத்தைக் கருதிய வாறு நோக்கி மேற் கூறுகின் றது. ]

10. ஓரி னுள்ளமே பாரின்மா னுடர்முத லுளவறு பிறப்பூடுஞ், சேரு மின்பமோன் றில்லையேன் பதுபிரத் தியக்கமா நீவல்லாய், போர்க ளாதிதுன் பிமையவ ரடைவ தும் புகலநூ லுணர்ந்தாயே, நேரி லாவரன் கழலலான் மிகுசுக நிலைபிறி திலையன்றே.

(பத உரை) உள்ளமே—நெஞ்சமே, ஓரின்—(உண்மை யாக) விசாரிக்குமிடத்து, பாரின்—(இப்) பூமிக்கண், மானுடர்—மக்கள், முதல்—முதல், உள—(தாவரம் ஈறாய்) உள்ள, அறு—அறு வகை, பிறப்பூடும்—பிறப்பி னுள்ளும், சேரும்—பொருந்தாநின்ற, இன்பம்—சுகம், ஒன்று — ஓர் (அணு வள வாயினும்), இல்லை — இன்று, என்பது—என்பது, பிரத்தியக்கம் ஆ(க)—காக்ஷிப் பிரமாண மாக, நீ — நீ(யே அறிய), வல்லாய்—வல்லாய், போர்கள் — (அஃது அன்றிச் சத்துருக்களோடு) அமர் (செய்தல்), ஆதி — முதலிய வற்றால், துன்பு—(வரும்) துன்பங்களை, இமையவர்—தேவர்கள், அடைவதும்—பொருந்துவதும், நூல்—(வேத ஆகம) சாஸ்திரங்கள், புகல — கூற, உணர்ந்தாயே — (அதைச் சத்தப் பிரமாணத்தால்) அறிந்தனை (என்று விவேகம் கூற, அதற்கு, மக்கண் முதலிய அறு வகைப் பிறப்பிற்கும், மே லாய தேவப் பிறப்பின்கண்ணும் இன்பம் இன்று என்றீர். இனித் தான் சுகம் ஆவது யாது என்று மநம் கேட்ப,), நேர் — (அதற்கு, ஒரு வாற்றானும்) உவமை, இலா — (கூறற்)கரிய, அரன்—சிவனது, கழல்—திருவடியே, அலால்— அல்லது, மிகு—மிகுந்த, சுக—(பேர்)இன்ப, நிலை—நிலை, பிறிது—வேறு, இலை—இன்று (என்று விவேகம் கூறிற்று.) எ-று.

(இ-பு) உள்ளமே - விளி. அறு - 'ஆறு' என்னும் எண்ணின் விகாரம். பிறப்பூடும் - உம் - முற் றுமை. பிரத்தியக்கம் - 'பிரத்தி

யக்ஷம்' என்னும் வட மொழி விகாரம். பிரத்தியக்க மா - 'பிரத்தி யக்க மாக என்பதன் கடைக் குறை. வல்லாய் - முன் னிலைக் குறிப்பு வினை முற்று. அடைவதும் - உம் - இறந்தது தழீஇய வெச்சம். உணர்ந்தாயே - ஏ - அசை நிலை. இலா - 'இல்லாத' என்னும் குறிப்புப் பெய ரெச்சத்தின் விகாரம். அலால், இலை - இவை இடைக் குறைகள். அன்று, ஏ - அசை நிலைகள்.

(சித-ரை) ஓரி னுள்ளமே பாரின் மானுடர் முத லுள வறு பிறப்பூடுஞ் சேரு மின்பமொன் றில்லை யென்பது பிரத்தியக்க மா நீ வல்லாய் எ-து,—நெஞ்சமே உண்மை யாக விசாரிக்கு மிடத்து இப் பூமிக்கண் மக்கண் முதல் தாவர மீறுயுள்ள அறு வகைப்பிறப் பினுள்ளும் பொருந்தாநின்ற சுகம் ஓ ரணு வள வாயினும் இன் றென்பது காட்சிப் பிரமாண மாக நீயே அறிய வல்லாய்,

போர்க ளாதி துன் பிமையவ ரடைவதும் புகல நூ லுணர்ந் தாயே எ-து,—அஃ தன்றிச் சத்துருக்களோடு அமர் செய்தல் முத லியவற்றால் வருந் துன்பங்களைத் தேவர்கள் பொருந்துவதும் வேதாகம சாஸ்திரங்கள் கூற அதைச் சத்தப் பிரமாணத்தால் அறிந்தனை யென்று விவேகங் கூற, அதற்கு மக்கண் முதலிய அறு வகைப் பிறப்பிற்கும் மே லாய தேவப் பிறப்பின்கண்ணும் இன்பம் இன் றென்றீர், இனித் தான் சுக மாவது யா தென்று மநங் கேட்ப,

நேரிலா அரன் கழலலான் மிகு சுக நிலை பிறி திலை யன்றே எ-து,—அதற்கு ஒரு வாற்றானும் உவமை கூறற் கரிய சிவனது திரு வடியே யல்லது மிகுந்த பே ரின்ப நிலை வேறு இன் றென்று விவேகங் கூறிற்று, எ-று.

பிறப்பும், இறப்பும், காமமும், நோயும், பயமும், முதலிய துன் பங்களைத் தேவர்க ளடைதலிற் போர்க ளாதி துன் பென்று கூறப் பட்டது. அன் றென்றது - அசை நிலை. இதற்கு உதாரணம்: பெருந் திரட்டு. "தீய வசுரர் பகையுண்டு செற்ற மார்வ மிக



வுண்டு, நோயுண் டநங்க னுருண்டு சோய்கட் கெல்லாந் தாயான, காய முண்டு கைதொழவேண்டினரு முண்டு கற்பத்தே, மாயுந் தன்மை யுண்டானால்,வானோர்க் கென்னை வளனுண்டே." ஆநந்தத் திரட்டு. "தேவின்மா னுடத்திற் றுன்பந் திகழ்வதிப் பரிசே யென்று, லாவகீழ் விலங்கு பக்கி யாதிதா வரமற் றெல்லா, மோவிய துன்ப வெள்ளத் துழைத்தலோ ரளவு முண்டோ, பாவமா நிரயந் தன்னிற் படுதுயர் பகரல் வேண்டா." மற்றும் வருவன வற்றாற் காண்க. (10)

[இங்ஙனம் கூறிய உபதேச மொழிகளை அர்த்த அங்கீகார மாக உட் கொண்டு பிரபஞ்சத்தில் மிகவும் உவர்ப்புப் பிறவாமல் நின்ற மநத்தைப் பார்த்து மேற் கூறுகின்றது.]

11. அன்றெ னக்குநீ யொருதுணை பிறப்பிறப் பதிற்றுய ரமுங்கேடுந், தின்ற லொன்றலால் வியாதியா திகளினாற் செறிதுய ரமுமோர்ந் தோர்ந், தென்று மேழ்பவக் கஞ்சிலை நெஞ்சமே யின்பவீ டேதுவென்றே, நின்று நின்றழு திலை தொழு திலைசிவ னேசர்தாள் பூசித்தே.

(பத உரை) எனக்கு — (பிறப்புத் துன்பம் என்றும், வீடு இன்பம் என்றும், உனக்கு நாநா உபாயங்களினாலும், யான் அறிவித்தும், நீ அப் பிறப்பினை நீக்கி, வீட்டினை அடைதற்கு ஏது வாய தவத்தினை விரைந்து செய்யாது, தாமசம் பண்ணு கின்றனை யாகலின்,) எனக்கு, ஒரு—ஒப் பற்ற, துணை—துணை, நீ அன்று—நீ அன்று (என்று விவேகம் கூற, அதற்கு, நீர் விடுக்கச் சொன்ன பற்றுக்கள் யாவும் விடுத்தேன். தவமும் செய்கின்றேன். நீர் இன்னும் கூறிய வாறும் கேட்க நிற்கின்றேன். இங்ஙனம் இருந்த என்னை அங்ஙனம் கூறியது என்னை என்று மநம் கேட்ப,), பிறப்பு—பிறப்பில் (கருப்பாசயப் பை உறுத்துதல் முதலிய ஐந்தி னால் வருகின்ற துன்பத்தையும்), இறப்பதில்—இறப்பில் (அத்

